கழக வெளியீடு, ௯௦௫



# நாயின் நன்றி

என்.கே. வேலன் எழுதியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1964

# பதிப்புரை

கதைகளின் வழியேதான் சிறுவர் கருத்தினை வளப்படுத்தலாம்; அவற்றின் வழியே தமிழ்ச் சுவையையும் ஊட்டலாம்; படிப்பில் ஓர் ஆர்வத்தையும் பெருக்கலாம்.

மணி ஒரு நாய்க்குட்டி; அதன் கதை இதன்கண் சொல்லப்படுகிறது. இந்நாய்க்குட்டி பட்ட இன்னல்கள் பல. எனினும் இவற்றினிடையேயும் தப்பி, கதிர்வேலுக்கு எப்படி உயிர்நண்பனாக இருந்தது என்பதை இந்நூலின்கண் சித்திரிக்கப் பட்டுள்ளது.

தமிழகப் பெற்றோரும், ஆசிரியப் பெருமக்களும், இவ்வெளியீட்டினையும் வரவேற்று, ஆதரவளிப்பார்கள் என நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



மணியும் புலியும் சண்டைசெய்தல் [பக்கம் 17

# நாயின் நன்றி



## 1

மணி ஒரு நல்ல நாய்க் குட்டி. அதன் தாய் நீலகிரி மலையின்மேல் ஒரு தோட்டக் காரனிடம் இருந்தது. அவனுடைய ஆடு மாடுகளைப் பாதுகாத்து வந்தது.

மணி மிகவும் அழகாய் இருந்தது. அதை ஒரு பண்ணையார் விலைக்கு வாங்கினார். அவ



ருடைய மகன் கதிர்வேல் நாய்க்குட்டி யிடம் அன்புடன் பழகிவந்தான்.



நாய்க்குட்டி அவனுடன் உலாவச் செல்லும். நன்ருய் விளையாடும். கோடை காலம் முடிந்தவுடன் கதிர்வேலின் தகப்பனுர் மலையை விட்டு ஊருக்குத் திரும்பிவந்தார். ஆனுல், மணிக்கு வருத்தம்தான்.

நாய்க்குட்டியை ஒரு கூடையில் போட்டு மோட்டார்வண்டியில் வைத்தார்கள். அது கூடையில் குடி இருந்ததே இல்லை. அதற்கு ஆத்திரம் பொங்கிற்று. கூடையைக் கடித்து ஒருபக்கம் வழி உண்டாக்கிற்று. கதிர்வேல் வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்தான். மணி மோட்டாரில்



இருந்து கீழே குதித்ததை அவன் பார்க்கவில்லை. குதித்ததும் மணி ஓடிப்போய் ஒரு புதருக்குள் மறைந்துகொண்டது.

மோட்டார் புறப்பட்டது. மோட்டாரின் ஓசை மணிக்குப் பிடிக்க வில்லை.

"இஃதென்ன வண்டி பிசாசு போல் இருக்கிறதே," என்று மணி தனக்குத் தானே சொல்லிக் கொண்டது. "கதிர் வேல் போய்விட் டானே! இனி யாரு டன் விளையாடுவது?" என்று வருத்தப்பட்டுக் கொண் டிருந்தது.



மணிக்குத் தாகம் எடுத்தது. புதரைவிட்டு வெளியில் வந்தது. கதிர்

வேலைத் தேடிப்பார்த்தது. எங்கும் காணேம். இரவும் வந்துவிட்டது. குளிர் தாங்கமுடியவில்லை. பாதை ஓர மாக உட்கார்ந்து அழுதுகொண்டு இருந்தது. அங்கே ஒரு பெரிய நாய் வந்தது.

"ஏன் அழுகிருய்? உனக்கு என்ன நேர்ந்தது?" என்று நாய்க்குட்டி யைக் கேட்டது. மணி நடந்தவை களைப்பற்றிச் சொல்லிற்று.

"மோட்டார்வண்டி இதற்குள் நெடுந்தூரம் போயிருக்குமே. இந்தப் பாதை வழியாகப் போனுல், ஒருவேளை உன் நண்பனைக் கண்டுபிடிக்கலாம்," என்று பெரிய நாய் சொல்லிற்று.

"எனக்கு வழி தெரியாதே," என்று மணி சொல்லிற்று.

"முயற்சி செய். ஒருவேளை உன் நண்பன் உன்னைத் தேடிக்கொண்டு

வருவான்," என்று பெரியநாய் சொல்லிற்று.

"ஆம். கதிர்வேல் மிகவும் நல்லவன். அவனே விட்டுப் பிரிந்து, நான் எப்படி இருப்பேன்?" என்று சொல்லிக் கண்ணீர்விட்டது.

"அழவேண்டாம். எங்கள் வீட்டிற்கு வா. கொஞ்சம் ரொட்டியும் தண்ணீரும் கொடுக்கிறேன்," என்று பெரியநாய் மணியை அழைத்துச் சென்றது.

மணிக்கு நல்ல உணவு கிடைத்தது. சிறிது நேரம் இளைப்பாறியது. பிறகு பெரியநாய் மணியை மோட்டார் சென்ற பாதைக்கு அழைத்துச் சென்றது.





மணியும் கரடியும்

"இந்தப் பாதை வழியாகச் சென்ருல், உன் நண்பனைக் கண்டுபிடிக்கலாம். அவனைப் பார்க்கமுடியாவிட்டால் இங்கேயே திரும்பி வந்துவிடு. நான் உன்னைப் பார்த்துக்கொள்கிறேன். பாதையின் நடுவில் நடக்கக் கூடாது. ஓரமாகப் போகவேண்டும். இல்லாவிடில், வண்டியில் அடிபட்டுப் போவாய்," என்று புத்திமதி கூறிற்று.

மணி, பெரியநாய்க்கு நன்றியைத் தெரிவித்துவிட்டுக்கதிர்வேலைத் தேடிப் புறப்பட்டது. வானத்தில் நிலவும்மீன்களும்தோன்றின. மணிக்குத் துணை எவரும் இன்றித் தனிமையாக வழிநடந்தது. எதிரில் ஒரு பெரிய கரடி வந்தது. மணி ஒரு மரத்தின் பின்புறத்தில் பதுங்கிக்கொண்டது.

"தம்பி! இந்த இரவில் இங்கே நீ என்ன செய்கிருய்? உன்னைப்போன்ற

சிறுவர்கள் படுக்கையில் இருக்கவேண்டிய நேரம் ஆயிற்றே,” என்று அன்புடன் கேட்டது.

மணி ‘கிடு கிடு’ என்று நடுங்கிற்று. பேசவும் முடியவில்லை.

“ஏன் இப்படி நடுங்குகிருய்? நாய்க்குட்டிகளை நான் சாப்பிடுவதில்லை,” என்று சிரித்துக்கொண்டே சொல்லிற்று. “எங்கே தனியாய்ப் போகிருய்?” என்று கேட்டது.

மணி தன் கதையைச் சொல்லிற்று.

“உன் நண்பன் இரவில் வரமாட்டான் என்று நினைக்கிறேன். கொடிய விலங்குகள் வந்தால், உன்னைப் பிடித்து விழுங்கிவிடும். எங்கள் வீட்டிற்கு வந்து தங்கிவிட்டுக் காலையில் போகலாம்,” என்று அழைத்தது.

மணிக்கு அதில் நம்பிக்கையில்லை. ஆயினும், கரடியுடன் அதன் குகைக்குச் சென்றது. அங்கே இரண்டு கரடிக் குட்டிகள் விளையாடிக்கொண்டு இருந்தன. அவைகள் தாய்க் கரடியிடம் ஓடிவந்தன.

"இது நல்ல நாய்க்குட்டி. நீங்கள் அதைக் கடிக்கக்கூடாது. உங்கள் உணவில் கொஞ்சம் அதற்குக் கொடுக்கவேண்டும்," என்று தாய்க் கரடி சொல்லிற்று.

சிறிய கரடிகள் எப்பொழுதும் நாய்க்குட்டியைக் கண்டதே கிடையாது. அதனுடன் அவைகள் நெடு நேரம் வரையில் விளையாடிக் கொண்டு இருந்தன. தாய்க் கரடி படுத்து உறங்கிற்று. நாய்க்



குட்டியும் அதன் அருகில் படுத்து உறங்கியது.

காலையில் தாய்க்கரடி மணியை வழி அனுப்பிக் கொடுத்தது. மோட்டார் வண்டிகளும், மாட்டு வண்டிகளும் போய்க்கொண்டே இருந்தன. நாய்க் குட்டியை எவரும் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. வெயில் நன்ருகக் காய்ந்தது. பாதை ஓரத்தில் ஒரு குதிரை மேய்ந்துகொண் டிருந்தது. குதிரையின் காலில் அடிபட்டு இருந்தது. அதனுல் நடக்கவும் முடியவில்லை. குதிரை மணியுடன் அன்போடு பேசிற்று.



"நீ பெரிய நாயிடம் திரும்பிப் போவதுதான் நல்லது. உன் நண்பனைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது

என்று நினைக்கிறேன். நான் பல முறை மலைக்குப் போய் வந்திருக் கிறேன். வழியும் எனக்குத் தெரியும். என் காலில் அடிபட்டு நடக்கமுடி யாத நிலைமையில் இருக்கிறேன். இல்லாவிடில், உன்னை நானே அழைத்துச் செல்வேன்," என்று குதிரை சொல்லிற்று.

மணி பாதை ஓரமாக உட்கார்ந்து மறுபடியும் அழுதது. "எப்படி ஊருக்குப் போய்ச் சேர்வது? கதிர் வேலை எப்போது காண்பது?" என்ற கவலை மணியை வாட்டிற்று.

# II

கதிர்வேலும் அவனுடைய தகப்பனும் கூடையைத் திறந்து பார்த்தார்கள். நாய்க்குட்டியைக் காணும். கதிர்வேல் அழுதான். அவனுக்குக் காய்ச்சல் வந்துவிடும்போல் இருந்தது. மறுநாள் காலையில் அப்பா கதிர்வேலை அழைத்தார்.



"நாம் இருவரும் போய்த் தேடிப் பார்க்கலாம். அதைக் கண்டு பிடிக்காவிட்டால், உன் உடம்பு கெட்டுப்போகும். வா போகலாம்," என்று கூப்பிட்டார்.

"அப்பா நான் இரவு முழுவதும் உறங்கவே இல்லை. மணிக்கு என்ன

தீங்குநேர்ந்ததோ," என்று கதிர்வேல் சொன்னான்.

இருவரும் மோட்டாரில் ஏறிக் கொண்டு மலைக்குப் போகும் பாதை வழியாகச் சென்றார்கள்.

"அப்பா! அதோ இருக்கிறது," என்று கதிர்வேல் கூவினான்.

அப்பா மோட்டாரை நிறுத்தினார். மணி குதிரையின் அருகில் உட்கார்ந்து இருந்தது. கதிர்வேல் மோட்டாரை விட்டுக் கீழே இறங்கிஓடினான். நாய்க்குட்டியை எடுத்துக் கொஞ்சினான்.

"நீ என்னை விட்டு ஓடிப்போகலாமா?" என்று சொல்லி அதை நீவிக் கொடுத்தான். அவன் கண்களில் நீர் பெருகிற்று. மணி கதிர்வேலின் கைக்கு முத்தம் கொடுத்தது. நொண்டிக் குதிரை தலையை அசைத்தது.

கதிர்வேலும் அப்பாவும் மோட்டாரில் புறப்பட்டார்கள். மணி கதிர்வேலின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டது. அதன் வாலை ஆட்டி நன்றியைத் தெரிவித்துக்கொண்டது.



மணியும்
கதிர்வேலும்

"இனிமேல் நீ ஓடிப்போகக் கூடாது. தெரியுமா," என்று கதிர் வேல் கேட்டான். சரி என்று மணி வாலை அசைத்தது.

கதிர்வேலிடம் இணைபிரியாமல் இருந்தது. அவன் போகும் இடங்களுக்கெல்லாம் மணியும் போகும். சில நாட்களுக்குப் பிறகு கதிர்வேலும், அப்பாவும் மலை அடிவாரத்திலுள்ள ஒரு சிறிய ஊருக்குப் போய்த் தங்கி இருந்தார்கள்.

அந்த ஊருக்குப் பக்கத்தில் அடர்ந்த காடுகள் இருந்தன. காடுகளில் கொடிய விலங்குகளும் இருந்தன. கதிர்வேல் மணியை வெளியே போகவிடாமல், எப்பொழுதும் தன் அருகிலேயே வைத்திருந்தான். மணி அங்கும் இங்கும் ஓடிவிளையாட விரும்பிற்று. ஒரு நாள் கதிர்வேலுக்குத் தெரியாமல் அது தெருவில் போய் விளையாடிக்கொண்டிருந்தது. மற்ற நாய்களிடம் தன் கதையைச்சொல்லிக் கொண்டிருந்தது. நீண்ட நேரம் பேசியதால், அதற்குத் தாகம் எடுத்

தது. "ஊருக்கு வெளியில் உள்ள குளத்தில் தண்ணீர் குடிக்கலாம்," என்று அங்கே சென்றது.

குளத்தின் கரையில் ஒரு கிழட்டுப் புலி உறங்கிக்கொண்டு இருந்தது. அதற்குப் பற்கள் எல்லாம் போய் விட்டபடியால், வேட்டையாட முடியாமல் ஊர் ஓரமாய் வந்து ஆடுமாடுகளையும், நாய்களையும் பிடித்துத் தின்னுவது வழக்கம். மணி நீர் அருந்தும் ஓசையைக் கேட்டு, அந்தப் புலி விழித்துக் கொண்டது.

"இன்று நமக்கு நல்ல வேட்டை தான். நாய்க்குட்டி நன்கு கொழுத்து இருக்கிறது," என்று நினைத்து நாய்க்குட்டியின் மேல் பாய்ந்தது. மணி புலியை எதிர்த்துச் சண்டையிட்டது. புலியும், நாயும் ஒன்றின் மேல் ஒன்று விழுந்து புரண்டன. ஒன்றை ஒன்று கடித்தன. மணி நன்

ருகச் சண்டை செய்தது. ஆயினும் மணிக்கு உடம்பெல்லாம் காயம் பட்டது. மணி புலியைத் தன்னுல் ஆன மட்டும் கடித்து வைத்தது. சில குரங்குகள் மரத்தின் மேல் இருந்து வேடிக்கை பார்த்தன. "கிழட்டுப் புலிக்கு அப்படித்தான் வேண்டும்," என்று குரங்குகள் பேசிக்கொண்டன.

சில குடியானவர்கள் அந்த வழியாக வந்தார்கள். அவர்களைக் கண்டவுடன் புலி ஓட்டம் பிடித்தது. அவர்கள் வராமல் இருந்தால் புலி நாய்க் குட்டியைக் கொன்று இருக்கும். குடியானவர்கள் மணியின் அருகில் வந்து பார்த்தார்கள்.

"பாவம்! நாய்க்குட்டி வீணுகப் போய்விட்டதே," என்று ஒருவன் கூறினுன்.

"இல்லை இல்லை. காயம் பட்டிருக்கிறது. ஆனுல், பிழைத்துக்கொள்

ளும். நம் ஊருக்கு வந்திருக்கும் பண்ணையார் வீட்டு நாய். இந்த நாயை அவருடைய மகன் கதிர்வே லிடம் நான் பார்த்திருக்கிறேன்," என்று மற்றொருவன் கூறினான்.

"அப்படியானால், நாயைக் கொண்டுபோய் அவர்களிடம் ஒப்பு விக்கலாம். நமக்குப் பணம் கிடைக் கும்," என்று சொல்லி மணியை எடுத் துக்கொண்டு பண்ணையார் வீட்டிற்கு வந்தார்கள்.

மணியின் நிலைமையைப் பார்த் துக் கதிர்வேல் அழுதான்.

"என் அருமை மணிக்கு இவ்வ ளவு துன்பம் வந்ததே," என்று வருந் தினான். காயங்களைக் கழுவி மருந்து போட்டான். இரவு முழுவதும் அதன் அருகிலேயே இருந்து சிகிச்சை செய் தான்.

காலையில் நாய் சற்றுத் தெளிவடைந்தது. கதிர்வேலின் கைக்கு முத்தமிட்டு அதன் நன்றியைத் தெரிவித்தது. அது சரியாக நடப்பதற்கு இரண்டு மூன்று நாட்கள் ஆயின. இதற்குப் பின் மணி வெளியில் எங்கும் போவதில்லை. மறுபடியும் புலி வந்து விடும் என்று அஞ்சிற்று. புலி மணியை எதிர் பார்த்துக்கொண்டிருந்தது.

கிழட்டுப் புலி ஏமாந்து போயிற்று. கைக்கு எட்டினது வாய்க்கு எட்டவில்லை. மறுபடியும் நாய்க்குட்டி வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டு இருந்தது. அந்த ஊரிலேயே மணியைப்போல் நல்ல நாய் ஒன்றுகூட இல்லை. எல்லா நாய்களும் எலும்பும் தோலுமாக இளைத்துப் போயிருந்தன. மணியை எப்படியாவது கொன்று தின்ன வேண்டுமென்று புலி சமயம் பார்த்துக்கொண்டு இருந்தது.

ஒருநாள் இரவு ஊர் அடங்கிய தும் புலி மெதுவாகக் கதிர்வேலும் அப்பாவும் தங்கி இருக்கும் வீட்டின் பக்கத்தில் வந்தது. வீட்டைச் சுற்றி லும் போய் நாய்க்குட்டியைத் தேடிப் பார்த்தது. வீட்டிற்குள் வந்து எட்டிப் பார்த்தது. மணி கதிர்வேலின் பக்கத்தில் படுத்து இருந்தது. புலியைக் கண்டவுடன் கீழே பாய்ந்து குலேக்கத் தொடங்கிற்று. அதைக் கேட்டுக் கதிர்வேல் எழுந்தான்.

"நாய் ஏன் குலேக்கிறது? நம் தூக்கத்தைக் கெடுக்கிறதே," என்று அப்பா சொன்னர்.

"ஒருபெரிய புலி வந்திருக்கிறது. அதைப் பார்த்துத்தான் மணி குலேக்கிறது," என்று கதிர்வேல் சொன்னுன்.

அப்பா ஒரு விறகுக் கட்டையை எடுத்துப் புலியை அடித்தார். அது கீழே குதித்துக் காட்டிற்குள் ஓடிப்

போயிற்று. பல் போனதிலிருந்து அது மனிதரை எதிர்ப்பதில்லை.

மணி மறுபடியும் குலைத்தது. வாலை ஆட்டி அதன் மகிழ்ச்சியைத் தெரிவித்தது.

மறுநாள் காலையில் புலியின் கால் அடையாளங்கள் வீட்டைச் சுற்றி லும் காணப்பட்டன.

"நீ மிகவும் நல்ல நாய். எங்களை உடனே எழுப்பி இருக்காவிட்டால், என்ன நடந்திருக்கும்!" என்று மணி யைத் தட்டிக் கொடுத்தார்.

"அந்த நாயைப் பிடிக்காமல் விடுவதில்லை," என்று புலி உறுதி செய்தது. "இந்தக் கிழட்டுப் புலிக்கு இன்னும் அறிவு வரவில்லை. பட்டால் தான் தெரியும்," என்று குரங்குகள் பேசிக்கொண்டன. இதைக் கேட்டுப் புலிக்குச் சினம் பொங்கி எழுந்தது.

## III

புலி ஊருக்குள் வந்ததைப் பற்றி எல்லோரும் பேசிக்கொண்டார்கள்.

"அதை ஒழிக்கவேண்டும். இல்லாவிடில், அது குழந்தைகளைக் கூடக் கொன்றுவிடும்," என்று ஒருவன் சொன்னான்.

"அதை ஓட்டுவதற்கு என்ன வழி?" என்று எல்லோரும் கேட்டார்கள்.

"தீ வைத்தால் அது இருந்த இடத்தைவிட்டு வேறு எங்கேயாவது ஓடிவிடும். மறுபடியும் வராது," என்று ஒரு பெரியவர் சொன்னார்.

எல்லோரும் அதற்கு இசைந்தார்கள். ஆடுமாடுகளை எல்லாம் பத்திரப்படுத்தினார்கள். காட்டிற்குத்

தீ வைத்தார்கள். மரங்கள் எல்லாம் தீப்பிடித்து எரிந்தன.



உறங்கிக்கொண்டு இருந்த புலி விழித்துக் கொண்டது. "என்ன புகை வருகிறது?" என்று கேட்டது.

"நீயே போய்ப் பார்," என்று குரங்குகள் சொல்லின.

புலி காட்டை விட்டு ஊருக்குள் ஓடிற்று. இப்படி வரும் என்று யாரும் எதிர் பார்க்கவில்லை. மணியும் கதிர்வேலும் ஒரு சுவரின் மேல் நின்றுகொண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர்.

"குண்டுநாயைக் கொல்வதற்கு இதுதான் நல்ல தருணம்," என்று சொல்லிக்கொண்டு அவர்களை நோக்கி வந்தது. கதிர்வேல் சுவரின் மேலி

ருந்து தவறிப் புலியின் முன்னுல் விழுந்துவிட்டான்.

"புலி பையனைக் கொன்று விடுமே!" என்று எல்லோரும் கதறினூர்கள்.

கதிர்வேல் கீழே விழுந்ததும் மணி சுவரிலிருந்து கீழே குதித்து அவனுக்குக் காவல் நின்றது. புலி அருகில் வந்தவுடன் அதன் கால்களை நன்ருய்க் கடித்துவிட்டது.

பெண்களும், குழந்தைகளும் வீட்டிற்குள் போய்க் கதவை அடைத்துக் கொண்டார்கள். பக்கத்தில் இருந்தவர்கள் பந்தங்களையும், கட்டைகளையும் காட்டிப் புலியைத் துரத்தினுர்கள். புலி காட்டிற்குள் புகுந்து ஓடிற்று. அதனுல் வெப்பம் தாங்க முடியவில்லை. கண்களில் புகை அடைந்தது. நெருப்பில் இருந்து தப்புவித்து ஆற்றில் குதித்தது. ஆற்

றைக் கடந்து பல மைல்களுக்கு அப்பால் ஓடிச்சென்று இளைப்பாற உட்கார்ந்தது.

"எனக்கு அந்த ஊரும் பிடிக்கவில்லை. அந்த நெருப்பும் பிடிக்கவில்லை. மறுபடியும் அங்கே போகமாட்டேன்," என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டது.

குரங்குகள் அதைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தன. தீ அணைந்த பிறகு குரங்குகள் எல்லாம் பழைய இடத்திற்குத் திரும்பிச் சென்றன. புலி மட்டும் அங்குப் போகவே இல்லை.

கதிர்வேலை வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். அப்பா ஓடிவந்து பார்த்தார்.

"எனக்கு ஒன்றும் இல்லை அப்பா. மணி இல்லாவிட்டால், என்னைப் புலி கொன்று இருக்கும்," என்று கதிர்வேல் சொன்னான்.

“மணி நல்ல நாய். இரண்டாவது முறை உன்னைப் புலியிடம் இருந்து காப்பாற்றி இருக்கிறது. அவ்வளவு பெரிய புலியை எப்படி எதிர்த்து நின்றது பார்த்தாயா?” என்று அப்பா சொன்னார்.

“நாய்களுக்கு ஆண்டவன் நல்ல அறிவு படைத்திருக்கிறார். நாய் எப்பொழுதும் நன்றி உடையது,” என்று கதிர்வேல் சொன்னான்.

நாய் வாலை ஆட்டிற்று. தன்னைப் பற்றிப் பேசிக்கொள்கிறார்கள் என்பதை உணர்ந்து பெருமை பாராட்டிற்று.

சில காலம் கழித்துக் கதிர்வேலும் அப்பாவும் அவர்களுடைய சொந்த ஊருக்குத் திரும்பி வந்தனர். கதிர்வேல் அவனுடைய தாயார் தங்கை முதலியவர்களிடம் நாயின் வீரத்தைப்

பற்றிப் புகழ்ந்து பேசினுன். புலியிடம் சண்டை போட்டதையும் அவர்களிடம் சொன்னுன். கதிர்வேலின் தாயார் மணிக்கு விருந்து வைத்தார்கள்.

"இந்த நாய் மட்டும் பக்கத்தில் இல்லாவிட்டால், என் அருமை மகன் இறந்துபோய் இருப்பானே," என்று அம்மா சொன்னுர்கள்.

கதிர்வேலின் நண்பர்கள் நாயைப் பார்க்க வந்தார்கள். அந்த நாய் புலியுடன் சண்டை போட்டதை அவர்கள் நம்பவில்லை.

"இவ்வளவு சிறிய நாய் பெரிய புலியுடன் எப்படிச் சண்டை போட முடியும்?" என்று கதிர்வேலைக் கேட்டார்கள்.

"என் நாயின் வீரம் உங்களுக்கு என்ன தெரியும்?" என்று சொல்லி

வாய் மூடுவதற்குள் ஒரு முரட்டுக் காளை தோட்டத்திற்குள் புகுந்தது. பயிர்களை அழித்து மரங்களை முறித்தது.



மணி காளையுடன் போர்செய்தல்

மணி ஓடிப்போய்க் காளையுடன் போர் தொடங்கிற்று. மாடு தோற்றுப் போய் ஓட்டம் பிடித்தது. மணி வெற்றியுடன் கதிர்வேலிடம் வந்து வாலைக் குழைத்தது.

“இது சரியான நாய்தான்; சிங்கக் குட்டிபோல் இருக்கிறது,” என்று கதிர்வேலின் நண்பர்கள் சொன்னார்கள். கதிர்வேல் சொன்னது உண்மை என்று அறிந்து கொண்டனர்.



# IV

கதிர்வேலின் பள்ளிக்கூடத்திற்கு நிதி சேர்த்தார்கள். பலவகையான வேடிக்கைகள் காட்டிப் பொருள் திரட்டினார்கள்.



ஒரு பையன் ஒரு மைனாக் குருவியைக் கொண்டு வந்து அதற்குப் பேசக் கற்றுக் கொடுத்தான். அதன் பேச்சைக் கேட்டு எல்லோரும் பள்ளிக்கூட நிதிக்குப் பணம் கொடுத்தார்கள்.

"நானும் அப்படிச் செய்தால் என்ன? நமது பள்ளிக்கூடத்திற்குப் பணம் சேர்த்துக் கொடுக்கலாமே," என்று கதிர்வேல் எண்ணினான்.

"உன் நாய்க்கு ஏதாவது வித்தை கற்றுக் கொடுக்கலாமே," என்று ஒரு பையன் சொன்னான்.

"ஆம்; அதற்கு நான் வித்தை கற்றுக் கொடுக்கிறேன்: அதனால் பள்ளிக்கூடத்திற்குப் பணம் சேரும்," என்று கதிர்வேல் சொன்னான்.

முதலில் உட்கார்ந்து முன் கால்களைத் தூக்குவதற்குக் கற்றுக்கொடுத்தான். பிறகு கீழே படுத்துக்கொள்ளவும், கூப்பிட்டவுடன் குதித்து எழுந்திருக்கவும் கற்றுக்கொடுத்தான். மணி இரண்டு மூன்று நாட்களில் இந்த வித்தைகளைக் கற்றுக்கொண்டது. கதிர்வேல் அப்பாவையும், அம்மாவையும் கூப்பிட்டு மணியின் வித்தைகளைக் காட்டினான். அப்பா எட்டு அணா இனாம் கொடுத்தார்.

கதிர்வேலின் நண்பர்கள் எல்லாரும் இந்த வேடிக்கையைப் பார்க்கவந்

தார்கள். நாயின் வேடிக்கையைப் பார்த்து மெச்சிக்கொண்டார்கள். அவர்கள் போய்ப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளை எல்லாம் அழைத்து வந்தார்கள். எல்லோரும் மணிக்குக் காசு கொடுத்தார்கள். கதிர்வேலின் கையில் பத்து ரூபாய் சேர்ந்தது. அதைக் கொண்டுபோய் உபாத்தியாயரிடம் கொடுத்தான்.

"நீ அருமையான நாய் வைத்திருக்கிறாய். அதை விலைக்குக் கொடுப்பாயா?" என்று உபாத்தியாயர் கேட்டார்.

"என் உயிர்போல அதை எண்ணி இருக்கிறேன். இந்த உலகத்திலுள்ள பணம் எல்லாம் கொடுத்தாலும் நாயை விற்கவே மாட்டேன்," என்று கதிர்வேல் சொன்னான்.

"இது போனால் இன்னொரு நாய் வருகிறது. இது என்ன அவ்வளவு

பெரிதா," என்று உபாத்தியாயர் சிரித்துக்கொண்டே சொன்னார்.

கதிர்வேல் மணியின் உதவியால் புலியிடம் இருந்து தப்பியதைப் பற்



உபாத்தியாயர் நாய்க்குட்டியைக் கேட்டல்

றியும், அது தன் உயிரைக் காப்பாற்றியதைப் பற்றியும் உபாத்தியாயரிடம் எடுத்துக் கூறினான். மேலும், அது மலைப்பாதையில் காணாமற்

போனதும், அதைத் தேடிக் கண்டு பிடித்ததையும் அவரிடம் சொன்னான்.

"அப்படியானால் சரி. அது உன்னிடமே இருக்கட்டும். வேறு யாரிடம் போனாலும் அதற்கு மன அமைதி ஏற்படாது. உன்னிடம் அதன் நன்றியைக் காட்டுகிறது. நீயே அதற்கு ஏற்ற தோழன்," என்று கூறி உபாத்தியாயர் கதிர்வேலை வீட்டிற்கு அனுப்பினார்.







தலைமை நிலையம் :

79, பிரகாசம் சாலை, சென்னை-1.

கிளை நிலையங்கள் :

திருநெல்வேலி-6.

மதுரை-1. கோயமுத்தூர்-1.

கும்பகோணம்-1. திருச்சிராப்பள்ளி-2.

விலை ரூ. 1-50

அப்பர் அச்சகம், சென்னை-.1